# ஸ்ரீ பகவத் கீதாஸாரம்



சாஸ்த்ர ரத்னாகரம் ப்ரஹ்மஸ்ரீ
தேதியூர் ஸுப்ரஹ்மண்ய சாஸ்திரிகள்
அவர்களின் உரை

ஸ்ரீசங்கர குருகுலம்
அபிராமபுரம், சென்னை—18



# ஸ்ரீ பகவத் கீதாஸாரம்

சாஸ்த்ர ரத்னாகர ப்ரஹ்மஸ்ரீ
தேதியூர் ஸுப்ரஹ்மண்ய சாஸ்திரிகள்
அவர்களின் உரை



ப்ரசுரம் :
ஸ்ரீ சங்கர குருகுலம்
அபிராமபுரம், சென்னை 18

**"Sri Vidya Vilas",**
81, Mowbrays Road,
Alwarpet,
3.1.1952.

ஆத்மவித்யையே பாரதவர்ஷத்திற்கு முக்கியமான செல்வம். அதனால்தான் நாம் என்றும் நன்மையையும் புகழும் பெற்றிருக்கிறோம். வேதங்கள் கூறும் இந்த வித்யையை உலகமெல்லாம் அறிவதற்கென்றே அர்ஜுனனை வியாஜமாக வைத்து நம் எல்லோருக்கும் ஸ்ரீ கிருஷ்ண பகவான் பகவத் கீதையால் உபதேசம் செய்கிறார். அதன் ஸாரத்தை சாஸ்திர ரத்னாகரம் தேதியூர் சுப்ரமண்ய சாஸ்திரியார் அவர்கள் **ஸ்ரீ பகவத் கீதாஸாரம்** என்ற அன்வர்த்தமான நூலில் விளக்கியிருக்கிறார். "குருமுகமாக வித்யையைக் கற்றுக் கொள்" என்று வேதம் சொல்லியபடி நமது குருவான சாஸ்திரிகள் எழுதியிருக்கும் அரிய நூலை நம் நன்மைக்காகவே நாம் படித்தல் வேண்டும். இந்த புஸ்தகத்தைப் படித்தால் வேதாந்த சாஸ்திர தத்வங்கள் நமக்கு "உள்ளங்கை நெல்லிக்கனிப்போல் பிரகாசிக்கும்".

**Justice T.L. Venkatarama Iyer,**
**சென்னை ஹைகோர்ட் நீதிபதி.**

முகவுரை

ஸ்ரீ சங்கர குருகுலம் 1952- ல் வெளியிட்ட இரண்டாம் பதிப்பு, புஸ்தகங்கள் முழுவதும் தீர்ந்து விட்ட நிலையில், 57 ஆண்டுகளுக்குப் பிறகு ஆஸ்திகப் பெருமக்களின் விருப்பத்திற்கு இணங்கவும் மேலும் **ஸ்ரீமத் பகவத் கீதாஸாரத்தை** இதுவரை படிக்காத ஆஸ்திக பக்தர்களின் ச்ரேயஸ்ஸின் பொருட்டும், ஸ்ரீ சங்கர குருகுலம் இந்த மூன்றாம் பதிப்பை இப்பொழுது வெளியிடுகிறது. அனைத்து ஆஸ்திக ஜனங்களும் இந்த நூலைப் படித்து ஸகல க்ஷேமங்களையும் அடைய ப்ரார்த்திக்கப்படுகிறது.

வைகாசி
விரோதி வருஷம்
June 2009

**ஸ்ரீ சங்கர குருகுலம்**
அபிராமபுரம், சென்னை - 18



## ஸ்ரீ பகவத் கீதாஸாரம்

**ஸ்ரீமத் பகவத்கீதையென்று** ப்ரஸித்தி பெற்று விளங்கி வரும் நூலானது ஓர் உயர்ந்த **ஸ்ம்ருதியாகும்.** இது **வேதவ்யாஸரால்** இயற்றப்பட்டு ஐந்தாவது வேதமாக விளங்கி வருகிற **மஹாபாரதத்தில்** நடுநாயகமாக விளங்கும் **பீஷ்மபர்வாவில்** ப்ரகாசிக்கின்ற ஜீவரத்னமாகும். இதில் பாரதவம்சத்தில் பிறந்து லோகத்தில் மஹா ப்ரஸித்தனாக விளங்கிவந்த **அர்ஜுனனுக்கு** பகவான் **க்ருஷ்ண பரமாத்மா** வேதரஹஸ்யமான அநேகதத்வங்களை உபதேசிக்கின்றார்.

இந்த லோகத்தில் ஜனனத்திற்கும், மரணத்திற்கும் நடுவில் உள்ள அல்பமான வ்யாதிகளை நிவ்ருத்திசெய்து ஸௌக்யப்படுத்தக்கூடிய வைத்யர்கள் அநேகர் இருந்த போதிலும், ஜனன மரண ரூபமாகிய மஹாகோரமான வ்யாதிக்கு ஔஷதம் கொடுத்து ஸௌக்யப்படுத்தக் கூடிய வைத்யர்களைக் காண்பதும் அரிதாகும். ஸகல ஜீவர்களும் அநாதிகாலமாகப் பிறப்பு இறப்பு என்ற கொடூரமான வ்யாதியால் கஷ்டப்பட்டுக்கொண்டு மிகவும் தவித்து வருகிறார்கள் என்பது ப்ரஸித்தம். பிறப்பிலும், இறப்பிலும் உள்ள துக்கத்தைச் சொல்லவும்

முடியுமோ! அந்த இரண்டினும் மேலான வ்யாதியும் இல்லை; அந்த வ்யாதிகளுக்கு மனுஷ்யனால் சிகித்ஸை செய்யவும் முடியாது. இதை வெகு காலமாக அறிந்த பகவான் கருணை கூர்ந்து இப்பூமண்டலத்தில் **யது** வம்சத்தில் **வஸுதேவருடைய** தர்மபத்நியான **தேவகீ** அம்மாளின் புத்ரன் என்ற வ்யாஜத்தால் அவதரித்து, **ஜனனமரணமென்ற பெரிய வ்யாதிகளை** நிவ்ருத்தி செய்து ஜீவகோடிகளை ஸம்ஸாரஸாகரத்தினின்றும் கரையேற்றி, நிரதிசயமான ஆநந்தத்தை அவர்கள் அடையும்படி செய்ய பகவான் கிருஷ்ணபரமாத்மா வேதமாகிய அரண்யத்திலிருந்து **மஹாவாக்யமென்ற** ஒரு **ஓஷதியைக்** கண்டுபிடித்து, அதைக் கசக்கிக் சாறுபிழிந்து **அகண்டகார வ்ருத்தி** என்ற பெயருடன் கூடின ஓர் ரஸாயனத்தை ஸம்ஸாரமாகிய மஹாவ்யாதிக்கு ஔஷதமாகச் செய்து வைத்துத் தான் ஸ்வயமாகவே ஒருவைத்யசாலை ஏற்படுத்தி உலத்தில் ப்ரஸித்தப்படுத்தினார். அந்த வைத்யசாலைக்குத்தான் **பகவத்கீதை** என்று பெயர்.

அந்தக் காலத்தில் உலகத்தில் ப்ரஸித்தி பெற்ற அர்ஜுனனை பகவான் ஸ்னேஹம் பண்ணிக் கொண்டார். அந்த மஹாபுருஷன் ஸம்ஸாரமென்ற மஹாவ்யாதியால் வெகுகாலமாக உபத்ரவப்பட்டு, அதற்குப் பூலோகத்தில் ஒரு வைத்யரிடத்திலும் மருந்து கிடைக்கப் பெறாமையால் மிகவும் கஷ்டமடைந்தது தெய்வீகமாக **பகவத்கீதை** என்ற ஒரு வைத்யாசலையுள்ளது என்று கேள்விப்பட்டு அந்த வைத்ய சாலைக்கு வந்து, வைத்ய

சிகாமணியான **க்ருஷ்ண பரமாத்மாவைக் கண்டு,** தனது வ்யாதியைத் தன் அனுபவத்தினாலேயே காண்பித்து, அந்த வைத்யனுடைய கருணையினால் அகண்டாகார வ்ருத்தியென்ற ரஸாயனத்தையும் தான் சாப்பிட்டு, ஸம்ஸாரமென்ற மஹா வ்யாதியினின்றும் வெளிவந்து ஸௌக்யத்தையடைந்தான்.

இதனால் க்ருஷ்ணபரமாத்மாவால் அர்ஜுனனுக்கு உபதேசிக்கப்பட்ட கீதாரஹஸ்யத்தை ஸகல ஜீவகோடிகளும் ஒவ்வொருதினத்திலும் பக்தியுடன் அனுபவித்துப் பாராயணஞ்செய்தால் புக்தி முக்தியைக்கைக் கொள்ளலாமென்பது திண்ணம். கீதையில் வேதாந்தரஹஸ்யம் உபதேசிக்கப்படுகின்றது. இதை யுத்தகாலத்தில் உபதேசித்ததின் ஸாரம் வருமாறு:

எந்த ரோகமானாலும் அதன் உத்பத்தி மூலம் இன்னதென்று கண்டுபித்து அதை வேரோடு நாசஞ்செய்தால் தான் அந்த வயாதி அடியோடு தொலையும். இந்த ஜனன மரண ரூபமான **ஸம்ஸாரமென்ற வ்யாதிக்கோ சோகமும் மோஹமுந்தான்** மூலம். மனிதனுக்கு எந்த வஸ்துவில் **என்னுடையது** என்ற மமதை இருக்கிறதோ அந்த வஸ்து தன்னை விட்டு பிரிந்துபோன பின் தன் மனதில் உண்டாகும் கஷ்டமே **சோகமாகும்.** அவ்விதமான சோகம் மேலிட தான் செய்ய வேண்டிய கார்யம் இது, செய்யக்கூடாத கார்யம் இது என்ற விவேகம். போய்த் தன் மனதுக்குத் தோன்றினபடி செய்ய விரும்பவதே

மோஹமாகும். இந்த சோகமோஹந்தான் ஸம்ஸாரரோகத்தின் மூலகாரணம். இது யுத்தகாலத்தில்தான் வெளிவந்தது.

பகவான் இரண்டு ஸேனைகளுக்கும் நடுவில் தேரை நிறுத்தின காலத்தில் அர்ஜுனன் "நான் யுத்தம் செய்ய மாட்டேன்; பீஷ்மர் முதலான பெரியோர்கள் என்னால் அடிக்கப்பட்டு மரித்துவிட்டார்களேயானால் அவர்களில்லாமல் நான் எப்படி ஜீவிப்பேன்?" என்று அலறினான். இதனால் பீஷ்மர் முதலானவர்களிடம் அர்ஜுனனுக்கு **மமதை** இருந்திருக்கிறது. அவர்களுடைய வியோகத்தை ஸஹிக்கமுடியாமல் கஷ்டப்படுகிறான். இதுதான் **சோகம்.**

இந்த சோகத்தால் விவேகமும் போய்விட்டது; தான் அரசனாக இருந்தும் 'பிச்சையெடுத்து ஜீவிக்கிறேன்' என்று சொன்னான்; யுத்தம் ன்ற தனது தர்மத்தை விட்டுப் பிச்சையெடுப்பது என்ற ப்ராம்மண தர்மத்தைக் கைக்கொள்ள யத்தனித்தான். இதுதான் **மோஹம்.**

பரமாத்மா தது மித்ரனான அர்ஜுனனிடத்தில் ஸம்ஸாரமென்ற கொடிய வ்யாதிக்கு மூலமான சோக மோஹங்களைக் கண்டதும், தத்வோபதேசம் செய்து அகண்டாகாரவ்ருத்தியை உண்டு பண்ணி, அதனால் சோக மோஹத்திற்குக் காரணமான மூலாக்ஞானத்தை நாசம் செய்து, பிறகு அதன் கார்யமான சோகமோஹங்களையும் தொலைத்து ஸம்ஸாரமென்ற மஹாரோகத்திலிந்து நமது

மித்ரனை வெளிப்படுத்தி ஸ்வஸ்தனாகச் செய்ய வேண்டுமென்ற எண்ணத்துடன் யுத்தகாலத்தில் அர்ஜுனனுக்குத் தத்வோபதேசம் செய்தார்.

'இந்த கீதையில் அர்ஜுனனுக்கு வேதாந்த தத்வோபதேசம் செய்யப்படுகிறதே! அது ந்யாயமா? அர்ஜுனனிடத்தில் குருகுலவாஸம் முதலான தர்மம் இல்லையே' என்ற ஸம்சயத்தை நிவ்ருத்தி செய்து கொள்ளும் ப்ரகாரமாவது:-

பூர்வ ஜன்மாக்களிலேயே குருகுலவாஸம் முதலான அதிகாரதர்மங்களை விதிப்படி அனுஷ்டித்து வேதாந்த விசாரம் பண்ணிக்கொண்டிருக்கும் நடுவில், ப்ரம்ம ஸாக்ஷாத்காரம் ஏற்படாமல் இறந்து போய்விட்டால் அவனை **யோக ப்ரஷ்டன்** என்று சாஸ்த்ரங்கள் சொல்லுகின்றன. அந்த யோகப்ரஷ்டனுக்கு **வைராக்யம்** மந்தமாயும், போகவாஸனை அதிகமாயுமிருந்தால் அவன் அடுத்த ஜன்மாவில் **ஆத்மஞானிகளான ராஜவம்சத்தில்** பிறக்கிறான் என்றும்; போகவாஸனை மந்தமாயும் வைராக்யம் அதிகமாயும் இருந்தால் **ப்ரம்மநிஷ்டர்களான** ப்ராம்மண வம்சத்தில் பிறக்கிறான் என்றும்; சாஸ்த்ரங்களில் சொல்லப்பட்டுள்ளன. இந்தப்ரகாரம் அர்ஜுனன் முன் ஜன்மாவில் நிவ்ருத்திமார்க்கத்திலேயே இருந்துகொண்டு குருகுலவாஸம் முதலான அதிகாரதர்மங்களை அனுஷ்டித்து வேதாந்த விசாரம் செய்துகொண்டுவருகையில் அனுபவம் ஏற்படுகிறதற்கு

முன்பே மரித்தவன் என்று பரதவம்சத்தில் ஜனித்திருப்பதனாலேயே தெரியவருகிறது. போகவாஸனை அதிகமாயும், வைராக்யம் மந்தமாகவும், இருக்கும் யோகப்ரஷ்டன் ஜனிக்கக்கூடிய உத்தமமான ராஜவம்சமே பரதவம்சம். ஆகையால் **அர்ஜுனன் யோகப்ரஷ்டன்** என்று தீர்மானமாகிறது.

ஆதலால், குருகுலவாஸம் முதலான அதிகார தர்மங்கள் இல்லாவிடினும் தத்வோபதேசம் செய்ய ந்யாயமுண்டு; குருகுலவாஸம் முதலான அதிகார தர்மங்கள் யோகப்ரஷ்டன் அல்லாத அதிகாரிகளுக்குத் தான் ஏற்பட்டது; என்ற ந்யாயத்தால் அர்ஜுனனுக்குத் தத்வோபதேசம் செய்தது சாஸ்த்ரஸம்மதந்தான் என்பது விளங்குகிறது.

இந்த பகவத்கீதை ஸ்ம்ருதி என்று முன் சொல்லப்பட்டதே! ஸ்ம்ருதி ஸ்வயமாக ப்ரமாணமாகாது; மூலச்ருதியை அபேட்சித்துத்தான் ப்ரமாணமாகும்; ஆகையால் இந்த கீதை என்ற ஸ்ம்ருதிக்கு மூலச்ருதி எது? என்று விசாரிக்க வேண்டுவது ஆவச்யகமாகும்.

பகவான் **விபூதி** அத்யாயத்தில் 'வேதங்களுக்குள் நான் ஸாமவேதமாகிறேன்' என்று சொல்லியிருப்பதால் ஸாமவேதத்தில்தான் மூலச்ருதியைத் தேடவேண்டும். அப்படி விசாரிக்க '**தத்வமஸி**' என்ற மஹாவாக்யமே இந்த ஸ்ம்ருதிக்கு மூலச்ருதியாகும். அந்த மஹா வாக்யத்திலோ **தத், த்வம், அஸி,** என்ற மூன்று பதங்கள்

அடங்கியிருக்கின்றன. அதை அனுஸரித்துத்தான் பகவானும் ஒவ்வொரு பதத்திற்கும் ஒவ்வொரு ஷட்கம் என்ற நியமத்துடன் மூன்று ஷட்கமாகக் கீதையைப் பிரித்து உபதேசித்தார். அதிலும், த்வம் என்ற பதத்தில் **ஜீவன், கூடஸ்தன், கர்மயோகம், ஸந்யாஸம், அவித்யை, அந்தக்கரணம்,** என்ற ஆறு தத்வங்கள் அடங்கியிருப்பதால் முதல் ஷட்கத்திற்கு மூலமான **த்வம்** என்ற பதத்தை யனுஸரித்து ஒவ்வொரு தத்வத்தையும் ஒவ்வொரு அத்யாயத்தில் ப்ரகாசப்படுத்தக் கருதி **ஆறு** அத்யாயங்கள் **முதல் ஷட்கத்தில்** ஏற்படுத்தப்பட்டன.

அதுபோலவே மத்யம ஷட்கத்திற்கு மூலமான **தத்** என்ற பதத்திலும், **ஈச்வரன், ப்ரம்மம், ஸாதனபக்தி, ஸாத்ய பக்தி, மாயை, ப்ரபஞ்சம்** என்ற ஆறு தத்வங்கள் அடங்கியிருப்பதால் **மத்யம ஷட்கத்திலும் தத்** என்ற பதத்தை அனுஸரித்து ஒவ்வொரு தத்வத்தையும் ஒவ்வொரு அத்யாயத்தில் ப்ரகாசப்படுத்தக் கருதி **ஆறு** அத்யாயங்கள் ஏற்படுத்தப்பட்டன.

அதுபோலவே அந்திம (கடைசி) ஷட்கத்திற்கு **அஸி** என்ற பதம் மூலமாகையால், அந்த பதத்திலும் **ப்ரக்ருதி விக்ருதிபாவஸம்பந்தம், கார்யகாரணபாவ ஸம்பந்தம், தாதாத்ம்யஸம்பந்தம், அபேதஸம்பந்தம், ஐக்ய ஸம்பந்தம், அம்சாம்சிபாவ ஸம்பந்தம்** என்ற ஆறு தத்வங்கள் அடங்கியிருப்பதால் கடைசி ஷட்கத்திலும் **அஸி** என்ற பதத்தை அனுஸரித்து ஒவ்வொரு தத்வத்தையும் ஒவ்வொரு அத்யாயத்தில்

ப்ரகாசப்படுத்தக் கருதி ஆறு அத்யாயங்கள் ஏற்படுத்தப்பட்டன.

இவ்விதம் மூலமான ச்ருதியில் பதினெட்டுத் தத்வங்கள் வெளியாகிறபடியே இந்த கீதையென்ற ஸ்ம்ருதியிலும் பதினெட்டுத் தத்வங்களும் ப்ரகாசப்படுத்தப்பட்டிருப்பதால் **கீதையில் பதினெட்டு அத்யாயங்கள்** ஏற்படுத்தப்பட்டன.

**த்வம்** என்ற பதத்தின் அர்த்தம் ஜீவன், அந்த ஜீவன் **அசுத்தஜீவன், சுத்த ஜீவன்** என இருவகைப்படுகிறான். ஜாக்ரத்திலும், ஸ்வப்னத்திலும் உள்ள ஜீவன் **அசுத்தன்;** ஸுஷுப்தியில் உள்ள ஜீவன் **சுத்தன்.** கடம், படம், கோவில், குளம் முதலான ஸ்தூல விஷயங்களைக் கண் முதலிய இந்த்ரியங்களை ஸஹாயமாய வைத்துக் கொண்டு மனஸினால் பகுத்தறிவது **ஜாக்ரமாகும்.** கடம் முதலான விஷயங்கள் இல்லாமலிருக்கும் பொழுதே இருப்பது போல் தோன்ற அவைகளைக் கண் முதலிய இந்திரியங்களை அபேக்ஷிக்காமலே மனஸினாலே மாத்ரம் பார்ப்பதுபோல் உள்ளது **ஸ்வப்னமாகும்.** இந்த இரண்டு அவஸ்தைகளிலும் இந்த ஜீவன் ஒரு ஸமயம் ஸுகத்தையும், ஒரு ஸமயம் துக்கத்தையும் அனுபவித்துக் கொண்டு கர்த்தாவாகவும், போக்தாவாகவும் ஸம்ஸாரியாய் கஷ்டப்படுகிறான். அதனால் ஜீவன் அந்த இரண்டு அவஸ்தைகளிலும் **அசுத்தன்** என்று சொல்லப்படுகிறான்.

ஒரு விஷயத்தையும் அனுபவிக்காமல் மனஸூம் இந்த்ரியங்களும் காரணமான அவித்யையில் அடங்கிப்போக ஜீவன் அஸம்ஸாரியாய்த் தாரதம்யம் இல்லாத ஆனந்தத்தை அனுபவித்துவரும் அவஸ்தை **ஸூஷூப்தி**யாகும். அந்த அவஸ்தையில் ஜீவன் ஒருவிதமான துக்கானுபவ மில்லாமலும், அகர்த்தாவாகவும், அபோக்தாவாகவும், அஸம்ஸாரியாகவும் இருந்துகொண்டு அகண்டமான ஆனந்தத்தை அனுபவித்துவருகிறபடியால் **சுத்த ஜீவன்** என்று சொல்லப்படுகிறான். இவனைத்தான் வேதாந்திகள் **கூடஸ்தன்** என்றும் சொல்லுவார்கள். இந்த கூடஸ்தனுக்குத்தான் '**தத்வமஸி**' என்ற ச்ருதியும் ப்ரம்மத்தின் அபேதத்தைப் போதிக்கிறது.

ஆகையால், முன் விவரித்தபடி சுத்த ஜீவன், அசுத்த ஜீவன் என்ற இரண்டு தத்வங்களும் **த்வம்** என்ற பதத்தில் அடங்கியிருக்கிறது. அசுத்த ஜீவன் **த்வம்** என்ற பதத்தின் சக்யார்த்தம் (அதாவது வாச்யார்த்தம்). சுத்த ஜீவன் **த்வம்** என்ற பதத்தின் லக்ஷ்யார்த்தம்.

அசுத்த ஜீவனுக்கு **ப்ரம்மத்தின் அபேதம்** ஏற்படாது; ப்ரம்மத்தின் அபேதந்தான் மோக்ஷமாகும். மோக்ஷத்தை அடைய விரும்பும் ஜீவன் தான் அசுத்த ஜீவனாக இருப்பதால் ப்ரம்மத்தின் அபேதமான மோக்ஷம் தனக்கு ஏற்படாது என்று தன்னை சுத்த ஜீவனாக ஆக்கிக் கொள்ள வேண்டும். அசுத்த ஜீவன் சுத்த ஜீவனாக வேண்டுமானால் அதற்கு இரண்டு உபாயமுண்டு. அவை **கர்மயோகமும், ஸன்யாஸமுமாகும்.**

**கர்மயோகமாவது:-** தன் வர்ணத்திற்கும் ஆச்ரமத்திற்கும் ஏற்பட்ட கர்மாக்களை அனுஷ்டிப்பது.

**ஸந்யாஸமாவது:-** ஸ்திரீ, பணம், பிள்ளை என்ற ஸாதனங்களோடு ஸகல கர்மாக்களையும் விடுவது. அசுத்த ஜீவன் ஸ்த்ரீ முதலான விஷயங்களில் வைராக்யமுள்ள வனானால் ஸந்யாஸத்தால் தன்னைச் சுத்தப்படுத்திக் கொண்டு **கூடஸ்தனாக வேண்டும்.** ஸ்திரீ முதலான விஷயங்களில் வைராக்யமில்லாமல் ஆசையுள்ளவனானால் கர்மானுஷ்டானத்தால் தன்னைச் சுத்தப்படுத்திக் கொண்டு **கூடஸ்தனாக வேண்டும்.**

எப்படி சுத்த ஜீவன் அசுத்த ஜீவன் என்ற இரண்டு தத்வங்கள் **த்வம்** பதத்தில் அடங்கினவோ, அப்படியே அசுத்தன் சுத்தனாவதற்கு ஏற்பட்ட உபாயங்கள் இரண்டும் **த்வம்** பதத்தில் அடங்கியிருக்கின்றன.

ஜீவன் உண்மையில் அஸம்ஸாரி. ஜீவனுக்குச் சேர்க்கை தோஷத்தால் அசுத்தி ஏற்பட்டது. **அந்தக் கரணம்** என்ற மனஸ் ஜீவனை ஸம்ஸாரியாகச் செய்த துஷ்டப்ராணி. அவ்வியல்புள்ள அந்தக்கரணத்தோடு சேராத பட்சத்தில் ஜீவன் சுத்தன்தான். ஆகையால் அந்தக்கரணத்தை விலக்க முயற்சி செய்ய வேண்டும். அந்தக்கரணமோ மிகவும் சஞ்சலமானவஸ்து. அதை நிக்ரஹம்பண்ணுவது மிகவும் ச்ரமமானது என்று அந்தக்கரணத்தையும் **த்வம்** என்ற பதத்தில் அடக்குகிறபடியால் **அந்தக்கரணம்** என்ற ஒருதத்வமும்

**த்வம்** பதத்தில் அடங்கியிருக்கிறது. அதுபோல **அவித்யையும்** அடங்கியிருக்கிறது.

ஜீவன் உண்மையில் ப்ரம்மமாகவேயிருக்கும் பொழுது 'தான்ப்ரம்மம்' என்ற அறிவில்லாமல் பண்ணி ப்ரம்ம ஸ்வபாவத்திற்கு விபரீதமான ஸ்வபாவத்துடன் கூடியனவன் போல் ஜீவனைச் செய்கிற ஒரு இருள்மயமான சக்தி விசேஷந்தான் **அவித்யை.** இதை ஜீவனுடைய **உபாதி** என்று சொல்லுவார்கள். ஒரு மனிதனுக்குப் ப்ரம்மரக்ஷஸ் பிடித்திருக்குமானால் அந்தப்ரம்மரக்ஷஸ் அந்த மனிதனுடைய உண்மையான ஸ்வரூபத்தை மறைத்து விபரீ தஸ்வபாவத்துடன் கூடினவன்போல அவனைச்செய்யும். ஆனால் அவன்தான் தன் உண்மை தனக்கு தெரியாமல் கஷ்டப்படுகிறான். அன்னியர்களுக்கு அவன் உண்மை நன்றகாத் தெரியும். யாருக்கு அந்த பிசாசு பிடித்திருக்கிறதோ அவனுக்குத்தான் தன் ஸ்வரூபத்தை மறைக்கும். அதுபோலவே இந்த அவித்யையும் எந்த ஜீவனைப் பிடித்திருக்கிறதோ அவனைத்தான் **தான் ப்ரம்மம்** என்ற அறிவிழந்தவனாகச் செய்யும். அவன் **பத்தன்** (அவித்யையால் கட்டப்பட்டவன்) என்று சொல்லப்படுவான்.

அவனுக்கு அன்யர்களான முக்தர்களுக்கு அவனுடைய ஸ்வரூபம் தெரியும். அந்த ஜீவனுக்கு அந்த முக்தர்கள் '**நீ ப்ரம்மந்தான்**' என்று உபதேசிக்கிறார்கள். இந்த அவித்யைதான் அந்தக்கரணத்திற்கும் காரணம். அவித்யையை ஜயித்தால் அந்தக் கரணத்தையும்

ஜயிக்கலாம். ஆகையால் ஜீவனுடைய உபாதியான அவித்யையும் **த்வம்** என்ற பதத்தில் அடங்கியிருக்கிறது. இவ்விதம் ஜீவன், கூடஸ்தன், கர்மயோகம், ஸந்யாஸம், அந்தக் கரணம், அவித்யை என்ற ஆறு தத்வங்களையும் அடக்கிக் கொண்டிருக்கின்ற **த்வம்** என்ற பதமானது முதல் ஷட்கத்திற்குக் காரணமானதால் முதல் ஷட்கத்தில் ஒவ்வொரு தத்வத்தையும் ஒவ்வொரு அத்யாயத்தில் ப்ரகாசம் பண்ண ஆறு அத்யாயங்கள் ஏற்பட்டன.

**தத்** என்ற பதத்தின் அர்த்தமும் **மாயா ஸம்பந்தப்பட்ட சைதன்யம், மாயாதீதமான சைதன்யம்** என இரண்டு வகைப்படும். மாயா ஸம்பந்தப்பட்ட சைதன்யத்தை ஈச்வரன் என்று சொல்லுவார்கள். மாயாதீதமான சைதன்யத்தை **ப்ரம்மம்** என்று சொல்லுவார்கள். ஈசுவரன் தான் இந்த ப்ரபஞ்சத்திற்கு மூலகாரணமான வஸ்து. உலகத்தின் ஸ்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம் முதலியன ஈச்வரனிடத்திலிருந்துதான் ஏற்படுகிறது. இந்தப் ப்ரபஞ்சமும், ப்ரபஞ்சத்திற்குக் காரணமான ஈச்வரனும், எதனிடத்தில் கல்பிதமோ அதுதான் **ப்ரம்மமாகும்.**

**தத்** என்ற பதத்தின் வாச்யார்த்தம் ஈச்வரன்; **லக்ஷ்யார்த்தம் ப்ரம்மம்** ஒவ்வொரு பதத்திற்கு **வாச்யார்த்தம், லக்ஷ்யார்த்தம்** என்ற இரண்டு அர்த்தம் உண்டு. எந்தெந்த சப்தத்திற்கு எந்தெந்த அர்த்தத்தைச் சொல்ல சக்தியோ அந்த அர்த்தம் வாச்யார்த்தமாகும். எந்தெந்த சப்தத்திற்கு எந்தெந்த அர்த்தத்தில் தாத்பர்யமோ அந்த அர்த்தம் **லக்ஷ்யார்த்தமாகும்.**

உதாரணம், வீதியில் வாழைக்காய் போகிறது என்றால் அந்த ஸந்தர்ப்பத்தில் வாழைக்காய் என்ற சப்தத்திற்கு வாழைமரத்திலுண்டான ஒரு காய் விசேஷத்தில்தான் சக்தி. அதனால் அந்தக் காயை வாழைக்காய் என்ற சப்தத்தின் சக்யார்த்தமாகச் சொல்ல வேண்டும். ஆனால், வாழைக்காய் போகும் சக்தியுள்ள வஸ்துவன்று; வாழைக்காய் ஜடமல்லவா அதன் தாத்பர்யமோ வாழைக்காய் கொண்டு போகிறவனிடத்தில். ஆகையால் வாழைக்காய் கொண்டு போகிறவன் **வாழைக்காய்** என்ற சப்தத்தின் **லக்ஷ்யார்த்தம்.**

ஒவ்வொரு சப்தத்திற்கும் வாச்யார்த்தம், லக்ஷ்யார்த்தம் என்ற இரண்டு வகை அர்த்தம் சொல்லப்படினும், வாச்யார்த்தத்திற்கு அனுபபத்தி வருகிற இடத்தில் மாத்ரம் லக்ஷ்யார்த்தத்தை அங்கீகரிக்க வேண்டும். அனுபபத்திவராத இடத்தில் சக்யார்த்தத்தை மாத்ரம் எடுத்துக் கொண்டால் போதும். ஆகையால் ப்ரக்ருதத்திலும் **தத் என்ற பதத்தின் வாச்யார்த்தம் ஈச்வரன். லக்ஷ்யார்த்தம் ப்ரம்மம்.**

இந்த ப்ரகாரம் **தத்** என்ற பதத்தில் ஈச்வரன், ப்ரம்மம் என்ற இரண்டு தத்வங்கள் அடங்கியிருக்கின்றன. உலகத்தில் ஒரு மனிதன் மற்றொரு பெரிய மனிதனைப் பார்க்க இச்சையுள்ளவனாக இருந்தால் அந்தப் பெரிய மனிதனிடம் எந்த வேஷத்தோடு போக வேண்டுமோ அந்த வேஷத்துடன் தான் போக வேண்டும். அதிலும் அந்தப் பெரிய மனிதன் தன் மனைவியோடு ஏகாந்தமாக

இருக்கும் ஸமயத்தில் பார்க்கத் தகுந்தவனல்லன். மனைவியோடு சேர்ந்திராமல் தனித்திருக்கும் ஸமயத்தில்தான் பார்க்கத் தகுந்தவனாகிறான். அதுபோலப் ப்ரக்ருதத்திலும், ஜீவன் மோக்ஷத்தை இச்சித்தால் ப்ரம்மத்தைப் பார்க்க வேண்டுமென்று சொல்லப்படுகிறது. ப்ரம்மத்தைப் பார்க்க விருப்பமுள்ள ஜீவன், தான் அசுத்தனாகவும், ஸம்ஸாரியாகவும் இருந்தால் முடியாது. சுத்தனாகவும், அஸம்ஸாரியாகவும் ஆக வேண்டும். அதற்காககத் தான் முதல் ஷட்கத்தில் அசுத்த ஜீவன், சுத்த ஜீவன் என்ற இரண்டு விதமாகப் பிரித்துக் கொண்டு அசுத்த ஜீவன் சுத்த ஜீவனாவதற்குக் கர்மயோகம், ஸந்யாஸம் என்ற இரண்டு உபாயங்களும் சொல்லப்பட்டன.

அப்படி சுத்தனான ஜீவனும், **தத்** என்ற பதத்தின் அர்த்தமான ப்ரம்மம் மாயையோடு கூடியிருக்குங்காலத்தில் அதைப் பார்க்கமுடியாது. மாயாஸம்பந்தப்பட்ட ப்ரம்மத்தைப் பார்ப்பதிலும் ப்ரயோஜனம் ஒன்றும் இல்லை. அதற்காக அந்தப் ப்ரம்மத்தை மாயாதீதமாகப் பண்ணிப் பார்க்க வேண்டும். மாயா ஸம்பந்தப்பட்ட ப்ரம்மம் ஈச்வரன் என்று முன் சொல்லப்பட்டது. அது அசுத்த ப்ரம்மம். மாயாதீதமான ப்ரம்மம் சுத்த ப்ரம்மம், அசுத்த ப்ரம்மமான ஈச்வரனைப் பார்த்து "நீ என் விஷயத்தில் மாயையைத் தள்ளி சுத்த ப்ரம்மமாக வேண்டும்" என்று பக்தி பண்ணவேண்டும். அந்த பக்தியும் **ஸாதனபக்தி, ஸாத்ய பக்தி** என இரண்டு வகைப்படும்.

**ஸாதன பக்தியாவது** : வெளியில் விக்ரஹம், ப்ரதிமை, முதலானவைகளை வைத்துக் கொண்டு பூஜை பண்ணுவது, **ஸாத்ய பக்தியாவது:** உள்ளே மனஸினால் செய்யும் த்யானம். அவிவேகிக்கு ஸாதன பக்தியும், விவேகிக்கு ஸாத்ய பக்தியும் ஏற்பட்டன. இவ்விதம் ஈச்வரன், ப்ரம்மம், ஸாதனபக்தி, ஸாத்யபக்தி என்ற நான்கு தத்துவங்களும் **தத்** என்ற பதத்தில், அடங்கியிருக்கின்றன. தவிரவும் மாயை உண்மையில் அத்விதீயமான ப்ரம்மத்தினிடத்தில் ப்ரபஞ்சமாகிய த்விதீயவஸ்துவை உண்டுபண்ணி ப்ரம்மத்தை **ஸத்விதீயம்போல்** பண்ணுகிறபடியால், அதையும் முமுக்ஷுக்கள் அவச்யம் நிவ்ருத்தி செய்து கொள்ள வேண்டும். அந்த மாயை ஈச்வரனுடைய உபாதியானதால் ஈச்வர தத்வத்தோடு சேர்ந்து **தத்** என்ற பதத்தில் அடங்கியிருக்கிறது.

மாயை அவித்யையைப் போலன்று. யாரிடம் தான் இருக்கிறதோ அவனுக்கு அவனுண்மையை மறைக்காது. இதரர்களுக்குத்தான் அவன் உண்மையை மறைக்கும். ஒரு மனிதன் தான் புருஷனாக இருந்தும் நாடகத்தில் ஸ்த்ரீ வேஷம் போட்டுக் கொள்கிறான். அந்த ஸ்திரீ வேஷமானது அவனுக்குத் **தான் புருஷன்** என்ற அறிவைக் கெடுக்காது. நாடகசாலையில் நாடகம் பார்க்க வந்த ஜனங்களுக்கு ஸ்த்ரீ வேஷம் போட்டுக் கொண்டவனுடைய உண்மையை மறைக்கும். அதுபோல, மாயை ஈச்வரனுக்கு அவன் ஸ்வரூபத்தை மறைக்காது. ஜீவகோடிகளுக்கு ஈச்வரனைத் தெரியாதபடி

மறைக்கும். ராமன், க்ருஷ்ணன் முதலான அவதாரமூர்த்திகள் மாயையை உபாதியாக உடைத்தானவர்களாகையால் அவர்களுக்குத்தான் மனிதன் என்ற எண்ணமில்லாமல், தான் பரமாத்மா என்ற அறிவு நிச்சயமுண்டு. இதர மனிதர்களுக்கு மாயையால் மறைவு ஏற்பட்டு ராமனையும் க்ருஷ்ணனையும் மனிதர் போலப் பாவிக்கிறார்கள். ஆகையால் மேற்சொன்ன ப்ரகாரம் மாயை **தத்** என்ற பதத்தின் அர்த்தமான ஈச்வரனுடைய வசத்திலிருப்பதால், ஈச்வரனைப் பக்தி பண்ணுகிறவர்களுக்கு ஈச்வர மாயையை வெகுதூரத்தில் விலக்கிவிட்டுத் தான் **சுத்தப் ப்ரம்மஸ்வரூபமாக** விளங்குகிறான். மாயா தத்வமும் **தத்** என்ற பதத்தில் அடங்கியிருக்கிறது.

அந்த மாயையினால் உண்டுபண்ணப்பட்ட இந்த ப்ரபஞ்சமும் மாயாதத்வத்தோடு சேர்ந்து அடங்கியிருக்கின்றது. ப்ரபஞ்சத்தை வெறுத்தவனுக்குத்தான் ப்ரமம் ப்ரகாசிக்கும். ஆகையால் ப்ரபஞ்சத்தில் வைராக்யம் வருவதற்காகப் ப்ரபஞ்சத்தின் உண்மையை விசாரித்துப் ப்ரபஞ்சம் பொய் என்று மத்யமஷட்கத்தில் தீர்மானிக்கப்படுகிறது.

இவ்விதம் ஈச்வரன், ப்ரம்மம், ஸாதநபக்தி, ஸாத்யபக்தி, மாயை, ப்ரபஞ்சம் என்ற ஆறு தத்வங்களையும் அடக்கிக் கொண்டிருக்கிற தத் என்ற பதம் மத்யமஷட்கத்திற்கு மூலமானதால் ஒவ்வொரு தத்வங்களை ஒவ்வொரு அத்யாயத்தில் ப்ரகாசப்படுத்த மத்யமஷட்கத்திலும் ஆறு அத்யாயங்கள் ஏற்பட்டன.

அதுபோல **அஸி** என்ற பதத்திலும் ஆறு தத்வங்கள் அடங்கியிருக்கின்றன. **த்வம்** என்ற பதத்தின் அர்த்தமான ஜீவனுக்கும், **தத்** என்ற பதத்தின் அர்த்தமான ப்ரமத்திற்கும் என்னவிதமான ஸம்பந்தம் உள்ளது என்பது **அஸி** என்ற பதத்தால் சொல்லப்படுகிறது.

**தாதாத்ம்யம்** என்ற ஒரு ஸம்பந்தமுண்டு. அதாவது: சாளக்ராமம் உண்மையில் விஷ்ணுவில்லையென்றாலும், விஷ்ணுவாகபாவித்து உபாஸிக்கிறபடியால் அந்த சாளக்ராமத்திற்கும் விஷ்ணுவிற்கும் உள்ள ஸம்பந்தம் **தாதாத்ம்ய ஸம்பந்தம்**. அதுபோல ஜீவனுக்கும் ப்ரம்மத்திற்கும் உள்ள ஸம்பந்தம் தாதாத்ம்ய ஸம்பந்தமா?

அன்றி, **அபேதம்** என்ற ஒரு ஸம்பந்தம் உண்டு. அதாவது: கடம், த்ரவ்யம் என்ற இரண்டிற்குமுள்ள ஸம்பந்தம் **அபேத ஸம்பந்தம்**. அதுபோல ஜீவனுக்கும் ப்ரம்மத்திற்குமுள்ள ஸம்பந்தம் அபேதஸம்பந்தமா?

அன்றி, **ஐக்யம்** என்ற ஒரு ஸம்பந்தம் உண்டு. அதாவது: ஒன்றானவஸ்து இரண்டுபோல் புருஷ தோஷத்தால் தோன்றுகிற இடத்தில், தோற்றத்தில் இரண்டு போல ப்ரகாசிக்கிற இரண்டு வஸ்துக்களுக்குமுள்ள ஸம்பந்தம் ஐக்ய ஸம்பந்தம். ஒரு தீபம் எரிந்து கொண்டிருக்கும் போது நேத்ர தோஷமுள்ளவனுக்கு இரண்டு தீபம் போல் தோன்றுகிறது; அந்த இடத்தில் கண் தோஷம்

இல்லாதவர்கள் ஒரு தீபம் தான் என்று சொல்லுகிறார்கள். அது போல **சைதந்யம்** உண்மையில் ஒன்று தான். நமது தோஷத்தால் ஜீவன் ப்ரம்மம் என்று இரண்டு போல் தோன்றுகிறது. அதை ந்வ்ருத்தி செய்ய **அஸி** என்ற பதம் **ஐக்யத்தை** உபதேசிக்கிறது என்பதை ஒப்புக் கொள்வதன் மூலம் ஜீவனுக்கும் ப்ரம்மத்திற்கும் உள்ள ஸம்பந்தம் ஐக்ய ஸம்பந்தமா?

அன்றி, **ப்ரக்ருதிவிக்ருதிபாவ ஸம்பந்தம்** என்ற ஒரு ஸம்பந்தமுண்டு அதாவது: மண்கடம் என்ற இடத்தில் மண்ணுக்கும் கடத்திற்கும் உள்ள ஸம்பந்தம் ப்ரக்ருதி விக்ருதிபாவஸம்பந்தம். அதுபோல ஜீவனுக்கும் ப்ரம்மத்திற்கும் உள்ள ஸம்பந்தம் ப்ரக்ருதிபாவஸம்பந்தமா?

அன்றி **கார்யகாரணபாவஸம்பந்தம்** என்ற ஒரு ஸம்பந்தம் உண்டு அதாவது: குயவனுக்கும், கடத்திற்கும் உள்ள ஸம்பந்தம். அதுபோல ஜீவனுக்கும், ப்ரம்மத்திற்கும் உள்ள ஸம்பந்தம் கார்ய காரணபாவ ஸம்பந்தமா?

அன்றி, **அம்சாம்சிபாவஸம்பந்தம்** என்றும் ஒரு ஸம்பந்தமுண்டு அதாவது: அக்னிக்கும் பொறிக்கும் உள்ள ஸம்பந்தம் அம்சாம்சிபாவஸம்பந்தம். அதுபோல ஜீவனுக்கும் ப்ரம்மத்திற்குமுள்ள ஸம்பந்தம் அம்சாம்சி பாவ ஸம்பந்தமா?

இவைகளை விசாரித்தறியும்படி இந்த ஆறு ஸம்பந்தங்களான ஆறு தத்துவங்கள் அடங்கிய **அஸி** பதம் கடைசி ஷட்கத்திற்கு மூலமானதால், ஆறுவித ஸம்பந்த தத்வங்களையும் ஒவ்வொரு அத்யாயத்திலும் ஒவ்வொன்றாகப் பூர்வபக்ஷ ஸித்தாந்தரீதியாக நிர்ணயிக்கும் பொருட்டுக் கடைசிஷட்கத்திலும் ஆறு அத்யாயங்கள் ஏற்பட்டன. இவ்விதம் சொல்லப்பட்ட ஆறுவிதமான ஸம்பந்தங் களுக்குள் **ஐக்யம்** என்றதுதான் சாஸ்த்ரப்படி **த்வம்** பதத்தின் லக்ஷ்யார்த்தமான **கூடஸ்தனுக்கும் தத்** பதத்தின் லக்ஷ்யார்த்தமான **ப்ரம்மத்திற்கும்** ஏற்பட்ட ஸம்பந்தமாகும். "தத்வமஸி" என்ற மஹாவாக்யம் இந்த பகவத் கீதையாகிய ஸ்ம்ருதிக்கு மூலச்ருதி என்று முன்பு விவரிக்கப்பட்டிருக்கிறது. அந்த ச்ருதியிலோ "தத்" "த்வம்" என்ற இரண்டு பதமும் ஸமானாதிகரணமாக ஏற்பட்டிருக்கின்றன. அதாவது: ஒரே வேற்றுமையினால் உபயோகிக்கப்பட்டிருக்கின்றன. எந்த இடத்தில் இரண்டு பதங்கள் ஒரே வேற்றுமையில் சொல்லப்படுகின்றனவோ, அந்த இடத்தில் பதம் இரண்டானாலும், அர்த்தம் ஒன்றுதான் என்பது சாஸ்த்ரத்தின் மர்யாதை.

வேற்றுமையின் வித்யாஸத்தால்தான் அர்த்தத்திற்கு வித்யாஸம் ஏற்படும். வேற்றுமை ஒன்றானால் அர்த்தம் ஒன்றுதான். "இவன் ப்ராம்மணன்" என்ற இடத்தில் இவன் என்ற பதமும், "ப்ராம்மணன்" என்ற பதமும், வெவ்வேறாக இருந்தாலும், வேற்றுமை ஒன்றாக

இருப்பதனால், அர்த்தம் வேறுபடுகிறதில்லை. "இவன்" என்ற ஸாமான்ய சப்தத்தாற் சொல்லப்படுகிற அர்த்தமும், "ப்ராம்மணன்" என்ற விசேஷசப்தத்தாற் சொல்லப்படுகிற அர்த்தமும் ஒன்றுதான். "ராஜாவினுடைய புருஷன்" என்ற இடத்தில், ராஜ சப்தத்தின் அர்த்தம் வேறு, புருஷ சப்தத்தின் அர்த்தம் வேறு. ராஜ சப்தம் ஆறாவது வேற்றுமையாகவும், புருஷ சப்தம் முதல் வேற்றுமையாகவும் இருக்கிற வேற்றுமையின் வித்யாஸந்தான் அதற்குக் காரணமாகும். ஆகையால் ப்ரக்ருதத்தில் "தத்வமஸி" என்ற மஹா வாக்யத்தில் "தத்" "த்வம்" என்ற இரண்டு பதம் இருந்தாலும், வேற்றுமை ஒன்றாக இருப்பதனால், **த்வம்** என்ற பதத்தின் அர்த்தத்தைக் காட்டிலும் **தத்** என்ற பதத்தின் அர்த்தம் வேறில்லை. **தத்** என்ற பதத்தின் அர்த்தத்தைக் காட்டிலும், **த்வம்** என்ற பதத்தின் அர்த்தமும் வேறில்லை. இரண்டும் ஒன்று தான் என்றது ச்ருதியின் ஸ்வபாவத்தாலேயே **த்வம்** பதத்தின் அர்த்தத்திற்கும் **தத்**பதத்தின் அர்த்தத்திற்கும் ஐக்யந்தான் ஸம்பந்தமாகும் என்றதும் தெரிகிறது.

ஐக்யத்திற்கு வேறான ப்ரக்ருதிவிக்ருதிபாவஸம்பந்தமோ, கார்யகாரணபாவ ஸம்பந்தமோ, அம்சாம்சிபாவ ஸம்பந்தமோ, தாதாத்ம்ய ஸம்பந்தமோ, அபேத ஸம்பந்தமோ இந்த ஐந்துவிதமான ஸம்பந்தங்களும், **த்வம்** பதார்த்தத்திற்கும் **தத்**பதார்த்தத்திற்கும் உள்ள ஸம்பந்தமாக ஆகாது.

**ம்ருத்திற்கும் கடத்திற்கும்** ப்ரக்ருதிவிக்ருதிபாவ ஸம்பந்தம் ஒப்புக் கொள்ளப்படுகிறது. அந்த இடத்தில், ம்ருத்திற்கும், கடத்திற்கும் அத்யந்த ஐக்யம் சொல்ல முடியாது. சொன்னால், ப்ருக்ருதி விக்ருதி என்ற வ்யவஹாரமே போய்விடும். ஆகையால் ம்ருத்திற்கும், கடத்திற்கும் பேதம் இஷ்டந்தான். ஆகவே ம்ருத்திற்கும், உள்ள **ப்ரக்ருதிவிக்ருதிபாவ ஸம்பந்தமானது பேதஸஹிஷ்ணு** வானபடியால், ஸமானாதிகரண ப்ரயோகத்தால், ஸர்வப்ரகாரத்தாலும் பேதத்தின் வ்யவஹாரத்திற்கே அவகாசமில்லை என்றதைப் போதித்து **தத்** பதார்த்தத்திற்கும் **த்வம்** பதார்த்தத்திற்கும், அத்யந்த ஐக்யத்தை உபதேசிக்கிற மஹாவாக்யத்தில், ப்ரக்ருதி விக்ருதிபாவ ஸம்பந்தத்திற்கே அவகாசமில்லை. ஆகையால் ஜீவனுக்கும் ப்ரம்மத்திற்கும் ப்ரக்ருதிவிக்ருதிபாவ ஸம்பந்தம் சாஸ்த்ரத்திற்கு ஸம்மதமாக ஆகாது.

அப்படியே, **கார்யகாரணபாவஸம்பந்தமும்** ஸம்பவிக்காது. குலாலனுக்கும் கடத்திற்கும் கார்யகாரணபாவ ஸம்பந்தம் ஏற்பட்டது. குயவனுக்கும் கடத்திற்குமோ பேதமானது லோகப்ரஸித்தம். ஆகையால் கார்யகாரண பாவ ஸம்பந்தமும் **பேதஸஹிஷ்ணு**வானதால் ஜீவனுக்கும் ப்ரம்மத்திற்கும் ஏற்படாது.

**அம்சாம்சிபாவஸம்பந்தமானது** அக்னிக்கும் பொறிக்கும் ஏற்பட்டது. அக்னிக்கும் பொறிகளுக்கும்

பேதமானது ப்ரஸித்தமாக அனுபவிக்கப் படுகிறபடியாலும், ஜீவனுக்கும் ப்ரம்மத்திற்கும் பேதம் இல்லாதபடியாலும், உண்மையில் ப்ரம்மமானது நிரம்சமானபடியாலும், ஜீவனுக்கும் ப்ரம்மத்திற்கும் அம்சாம்சிபாவஸம்பந்தமும் ஏற்பட நியாயமில்லை.

அப்படியே, ஜீவனுக்கும் ப்ரம்மத்திற்கும் **தாதாத்ம்ய ஸம்பந்தமும்** ஏற்பட ந்யாயமில்லை. சாளக்ராமத்திற்கும் விஷ்ணுவுக்கும் உள்ள ஸம்பந்தம் தாதாத்ம்ய ஸம்பந்தமே. உண்மையில் விஷ்ணுவாகாத சாளக்ராமம் விஷ்ணுவினுடைய ஸ்வரூபமாக மனிதரால் பாவிக்கப்படுகிறது என்றதுதான் அதன் அர்த்தம். ஆகையால், ஜீவன் உண்மையிலேயே **ப்ரம்ம ஸ்வரூபமானதால்,** ஜீவனுக்கும் ப்ரம்மத்திற்குமுள்ள ஸம்பந்தம் தாதாத்ம்ய ஸம்பந்தமாக ஆகாது.

அதுபோல, **அபேதஸம்பந்தமும் இல்லை.** கடம் கருப்பு என்ற இடத்தில், கடத்திற்கும், கருமை என்ற குணத்திற்கும் அபேதந்தான் அனுபவிக்கப்படுகிறது. அப்படியே, புஷ்பத்திற்கும் அதன் வாஸனைக்கும் அபேதந்தான் அனுபவிக்கப்படுகிறது. ஆகிலும், கடம் என்ற த்ரவ்யத்திற்கும் கருமை என்ற குணத்திற்கும், புஷ்பம் என்ற த்ரவ்யத்திற்கும் வாஸனை என்ற குணத்திற்கும், பேதமும் ஒப்புக் கொள்ளப்படுகிறது. ஆகையால் அபதே ஸம்பந்தமும் **பேதஸஹிஷ்ணுவான** ஸம்பந்தந்தான். அதனால் அந்த அபேதஸம்பந்தமும் ஜீவனுக்கும் ப்ரம்மத்திற்கும் ஏற்பட ந்யாயமில்லை.

ஐக்யம் என்றதைத்தவிர மற்ற ஐந்து விதமான ஸம்பந்தங்களையும், லோகப்ரஸித்தியையும் த்வைதிகளுடைய ஸித்தாந்தத்தையும் அனுஸரித்து அனுவாதம் செய்து கொண்டு, ஒவ்வொன்றையும், பலமானகாரணத்தோடு நிராகரணம் செய்து ஜீவப்ரம்ம ஐக்யமென்ற அத்வைத ஸித்தாந்தமானது ஸ்தாபனம் பண்ணப்பட்டிருக்கிறது.

இந்த கீதாசாஸ்த்திரத்தில் உள்ள 18 அத்யாயங்களில், **முதல் அத்யாயத்தால்** த்வம் பதத்தில் அடங்கிய அவித்யையின் ஸ்வரூபமும், அதை ஜயிக்கும் உபாயமும், **இரண்டாவது அத்யாயத்தால்** த்வம் பதத்தில் அடங்கின அந்தக்கரணத்தின் ஸ்வரூபமும் அதை நிக்ரஹம் செய்யும் உபாயமும், **மூன்றாவது அத்யாயத்தால்** த்வம் பதத்தில் அடங்கிய கர்மயோகமும், **நான்காவது அத்யாயத்தால்,** த்வம்பதத்தில் அடங்கிய ஸன்யாஸமும், **ஐந்தாவது அத்யாயத்தால்** த்வம் பதத்தின் வாச்யார்த்தமான ஜீவனுடைய ஸ்வரூபமும், **ஆறாவது அத்யாயத்தால்** த்வம் பதத்தின் லக்ஷ்யார்த்தமான கூடஸ்தனுடைய ஸ்வரூபமாக **த்வம்** பதத்தில் அடங்கிய ஆறு **தத்துவங்களும், த்வம்** பதத்தையே மூலமாக ஆச்ரயிக்கும் முதல் ஷட்கத்தால், க்ரமமாகச் சொல்லப்படுகின்றன.

அதுபோல, மத்யம ஷட்கத்திலும், **ஏழாவது அத்யாயத்தால்** தத்பதத்தில் அடங்கிய மாயையும்

அதை ஜயிக்கும் உபாயமும், **எட்டாவது அத்யாயத்தால்** ப்ரபஞ்சமும் அதை வெறுக்கும் உபாயமும், **ஒன்பதாவது அத்யாயத்தால்** ஸாதன பக்தியும், **பத்தாவது அத்யாயத்தால்** ஸாத்ய பக்தியும், **பதினோறாவது அத்யாயத்தால்** தத் பதத்தின் வாச்யார்த்தமான ஈச்வரனுடைய ஸ்வரூபமும் **பன்னிரெண்டாவது அத்யாயத்தால்,** தத் பதத்தின் லக்ஷ்யார்த்தமான ப்ரம்மத்தின் ஸ்வரூபமுமாக **தத்**பதத்தில் அடங்கிய ஆறு தத்வங்களும், தத்பதைத்தையே மூலமாக ஆச்ரயித்த மத்யம ஷட்கத்தால் க்ரமமாகச் சொல்லப்படுகின்றன.

அந்திம ஷட்கத்திலும் **பதிமூன்றாவது அத்யாயத்தால் "அஸி"** என்ற பதத்தில் அடங்கிய, ப்ரக்ருதிவிக்ருதி பாவஸம்பந்த பூர்வபக்ஷமும் அதன் ஸித்தாந்தமும், **பதினான்காவது அத்யாயத்தால்** அஸி என்ற பதத்தில் அடங்கிய கார்யகாரண பாவஸம்பந்த பூர்வபக்ஷ ஸித்தாந்த யுக்தியும், **பதினைந்தாவது அத்யாயத்தால்** அஸி பதத்தில் அடங்கிய அம்சாம்சி பாவ ஸம்பந்த பூர்வபக்ஷ ஸித்தாந்த யுக்தியும், **பதினாறாவது அத்தியாயத்தால்** அஸி பதத்தில் அடங்கிய தாதாத்ம்ய ஸம்பந்த பூர்வபக்ஷ ஸித்தாந்த யுக்தியும், **பதினேழாவது அத்யாயத்தால்** அஸி பதத்தில் அடங்கிய அபேத ஸம்பந்த பூர்வபக்ஷ ஸித்தாந்த யுக்தியும், **பதினெட்டாவது அத்யாயத்தால்** அஸி பதத்தில் அடங்கிய ஐக்யம் என்ற பரம ஸித்தாந்த ஸமர்த்தனமுமாக அஸி பதத்தில் அடங்கிய ஆறு

தத்வங்களும், அஸி பதத்தை மூலமாக ஆச்ரயித்த அந்திம ஷட்கத்தால் க்ரமமாகச் சொல்லப்படுகின்றன.

இதனால், இந்த கீதாசாஸ்த்ரத்தில், **ஜீவப்ரம்ம ஐக்யஞானந்தான் மோக்ஷஸாதனமென்று** சொல்லப்படுகிறது. அந்த ஞானத்தில் தான் இந்த சாஸ்த்ரத்திற்குப் பர்யவ ஸானம்.

அர்ஜுனன் யுத்தம் என்ற ஸ்வதர்மத்தை ஆரம்பித்து, இரண்டு ஸேனைகளுக்கும் நடுவில் பகவான் ரதத்தைக் கொண்டு போய் நிறுத்தினவுடன் பூஜ்யாளாகிய பீஷ்மர் முதலானவர்களைப் பார்த்து யுத்தம் செய்ய மனதில்லாமல் திரும்பிப் போக ஆரம்பித்த ஸமயத்தில் பகவான் அர்ஜுனனுக்கு உபதேசிக்க ஆரம்பித்தாரதலின் ஸமயத்தை அனுஸரித்து ஸ்வதர்மத்தைத்தான் உபதேசித்திருக்க வேண்டும்; ஆகையால் கீதைக்கும் கர்மாவில்தான் பர்யவஸானம் என்று சிலர் எண்ணக்கூடும் அதுவும் ஸரியே. **ஞானத்தில்தான் கீதாசாஸ்த்ரத்திற்கு மஹாதாத்பர்யம்;** கர்மாவில் **அவாந்தர தாத்பர்யம்** என்று சொல்லுவதிலும் விரோதமில்லை.

கீதையின் உபஸம்ஹார ச்லோகத்தில், கேவலம் ஜீவப்ரம்மஐக்ய ஞானம் போராது; அந்த ஞானம் ஸன்யாஸ ஸஹிதமாக இருக்க வேண்டும், ஸர்வகர்மபரித்யாகந்தான் முக்ய ஸன்யாஸம்; " நீ க்ஷத்ரியனாகையால் உனக்கு முக்ய ஸன்யாஸத்தில் அதிகாரமில்லை; கௌண ஸன்யாஸத்தில்தான் உனக்கு அதிகாரம், அவனவனுடைய வர்ணத்திற்கும்,

ஆச்ரமத்திற்கும் ஏற்பட்ட நித்ய நைமித்திகமான கர்மாக்களைச் செய்து கொண்டு 'நான் செய்கிறேன்' என்ற அஹங்காரத்தையும், 'எனக்கு இதன் பலன் ஏற்படப் போகிறது' என்ற அபிமானத்தையும் விட்டு விடுவதே **கௌணஸன்யாஸம்**; நீ க்ஷத்ரியனானபடியால் யுத்தமானது உன் **ஸ்வதர்மம்**, அந்த ஸ்வதர்மத்தை அனுஷ்டிக்கும்படியான பாக்யம் தானாகவே வந்திருக்கும் பொழுது அதை நீ அனுஷ்டித்துக் கௌணஸன்யாஸத்தை அடைந்தவனாக ஆகவேண்டும்; அப்படியானால் தான் முக்ய ஸன்யாஸத்தில் அதிகாரம் ஏற்படக்கூடிய பாக்யம் உனக்கு உண்டாகும்"; என்று பகவான் **உபஸம்ஹாரச்லோகத்தில் உபதேசிக்கிறபடியால், கீதா சாஸ்த்ரத்திற்கு ஜீவப்ரஹ்ம ஐக்ய ஞானத்தில் பரமதாத்பர்யத்தை ஒப்புக் கொண்டாலும்,** கர்மாவில் அவாந்தர தாத்பர்யத்தை ஒப்புக் கொள்ளுகிறபடியால் ஸந்தர்ப்ப விரோதமும் இல்லை.

இவ்விதம் **தத்வமஸி** என்ற மஹாவாக்யத்தை மூலமாக வைத்துக் கொண்டு பகவான் க்ருஷ்ண பரமாத்மா அர்ஜுனனுக்கு உபதேசித்த பகவத் கீதையின் ஸாரமான சுருக்கம் இதுவாகும். இதைப் படித்து மனனம் பண்ணுகிறவர்களுக்கு வேதாந்ததத்வங்கள் உள்ளங்கை நெல்லிக்கனிபோல் பிரகாசிக்கும்.

**சுபம்**

## பிழைத்திருத்தங்கள்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 2 | 24 | கஷ்டமடைநட்து | கஷ்டமடைந்து |
| 4 | 18 | தது | தனது |
| 10 | 19 | பட்சத்தில் | பக்ஷத்தில் |
| 18 | 4 | ந்வ்ருத்தி | நிவ்ருத்தி |
| 20 | 3 | சப்தத்தாற் | சப்தத்தால் |
| 24 | 10 | தத்பதைத்தையே | தத்பதத்தையே |
| 25 | 20 | போராது | போறாது |